T. C. A. Venkatesan



# ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் வைபவம்

## சொன்னவண்ணம் செய்த பெருமாள்

பிள்ளைலோகம் ஸ்ரீ உ.வே. ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி

ஸத்ய விரத க்ஷேத்திரம் என்று பெரும்புகழ் பெற்று விளங்கும் நகரம் காஞ்சீபுரம். இவ்வூரில், ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட எம்பெருமான்கள் எழுந்தருளி இருக்கும் பதினெட்டு திருக்கோயில்கள் இருக்கின்றன.

"தேவாதீச ந்ருஸிம்ஹ பாண்டவமஹாதூத ப்ரவாளப்ரபான்,
ஸ்ரீ வைகுண்ட பதிம் த்ரிவிக்ரமஹரிம் நீரேச மேகேச்வரௌ।
நீல வ்யோமவிபும் மஹோரகஹரிம் ஜ்யோத்ஸ்நேந்துவக்த்ரம் ஹரிம்
சோரேசம் க்ருதசித்த பக்த ஹ்ருதயாவாஸம் முகுந்தாஹ்வயம்:

காமாவாஸ பதிம் ந்ருகேஸரிவரம் தீபப்ரகாச ப்ரபும்
ஸ்ரீயுக்தாஷ்ட புஜாஸ்பதேச மனகம் ஸ்ரீமத்யதோக்தக்ரியம்।
இத்யஷ்டாதச திவ்யமங்கள வபுர்தேவான் ஸரோயோகிநா
ஸாகம் நிஸ்துல காஞ்ச்யபிக்ய நகரீநாதாந் நமாமஸ்ஸதா ॥

என்பது ஸ்ரீமணவாள மாமுனிகளின் திருவாக்கு. 1. ஸ்ரீ தேவப்பெருமாள், 2. அழகியசிங்கர், 3. பாண்டவதூதர், 4. பவழ வண்ணர், 5. ஸ்ரீ வைகுண்டநாதன் 6. உலகளந்தான், 7. நீரகத்தான், 8. காரகத்தான், 9. கார்வானத்துள்ளான், 10. ஊரகத்தான், 11. நிலாத்திங்கள் துண்டத்தான், 12. கள்வர், 13. உள்ளுவாருள்ளத்தான், 14. முகுந்தப்பெருமாள், 15. வேளுக்கை ஆளழகிய சிங்கர், 16. விளக்கொளியெம்பெருமான், 17. அட்டபுயகரத்தான், 18. சொன்னவண்ணம் செய்த பெருமான் (யதோக்தகாரி) ஆகியவர்களே முற்கூறிய பதினெட்டுக் கோயில்களிலுள்ள எம்பெருமான்களாவர். இவர்களுள் யதோக்தகாரிப் பெருமானை அனைவரும் பெரிய பெருமாள் என்று கூறுவர். தேவப்பெருமான் (வரதராஜப் பெருமாள்) அவதரிப்பதற்கு ஐந்து நக்ஷத்திரங்களுக்கு முன் யதோக்தகாரிப்பெருமான் அவதரித்தவர். தேவப்பெருமான் திருநக்ஷத்திரம்



கோமளவல்லித் தாயார்
யதோக்தகாரிஸன்னதி



ஸ்ரீயதோக்தகாரி எம்பெருமான்
சொன்னவண்ணம் செய்த பெருமாள்
திருவெஃகா

சித்திரையில் ஹஸ்தம். இந்த யதோக்தகாரிப் பெருமாள் திருநக்ஷத்திரம் சித்திரையில் புனர்வஸு. இவருக்கு முதன் முதலில் திருவெஃகா எம்பெருமான் என்றே திருநாமம். இவர் அர்ச்சாவதார நிலை கடந்து, திருமழிசைப்பிரான் சொன்னபடியெல்லாம் நடந்து கொண்டவராதலால் பிற்காலத்தில் இவருக்குச் சொன்னவண்ணம் செய்த பெருமாள் (யதோக்தகாரி) என்று பெயர் ஏற்பட்டது. இந்த எம்பெருமானைப் பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோர் மங்ளாசாஸனம் செய்திருக்கிறார்கள். இங்கு எழுந்தருளியிருக்கும் தாயாரின் பெயர் கோமளவல்லி, வேதஸாரவிமானம், பொய்கை புஷ்கரிணி, மேற்கே திருமுகமண்டலம், புஜங்க சயனம். பிரம்மாவுக்கு ப்ரத்யக்ஷம் கோயிலுக்கு வடக்குப் பக்கத்திலுள்ள பொய்கைக் குளத்தில் பொற்றாமரை மலரில் ஐப்பசித் திருவோணத்தில் பொய்கையாழ்வார் அவதரித்தார். பிரம்மா செய்த வேள்வியை அழிக்க வந்த வேகவதீ நதியைத் தடுப்பதற்காகக் குறுக்கே அணையாகப் பள்ளிகொண்டவராதலால் இப்பெருமானுக்கு 'வேகாஸேது' என்று பெயர் ஏற்பட்டது. 'ஸேது-அணை' தமிழில் 'வேகவணை' என்று ஆகி, பிறகு 'வெஃகணை' என்று மாறி, 'வெஃகா' என மருவியது.

'ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதம்' எனப்படுகிற தேவப் பெருமாளுக்கு வரந்தருமா மணிவண்ணன் என்ற திருநாமம். அதற்கேற்றவாறு வரமளிக்கும் பெருமையும் ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமானாலேயே ஏற்பட்டது. இவர் முன்னதாக அவதரிக்கவில்லையானால் தேவப் பெருமாளின் அவதாரமே ஏற்படாமல் போயிருக்கும் என்பது கருத்து. யதோக்தகாரியைப் பெற்றிருப்பது காஞ்சீபுரம் செய்த பாக்யமாகும் என்பதை "காஞ்சீ பாக்யம் கமல நிலயா சேதஸோ பீஷ்ட ஸித்தி." என்று பணித்தருளுகிறார் வேதாந்த தேசிகர் வேகாஸேது ஸ்தோத்திரத்தில்.

ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஒன்பது வகையான ஸம்பந்தம் (உறவு முறை) உண்டு. பிதா புத்ர ஸம்பந்தம், ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தம், சேஷ சேஷி ஸம்பந்தம், பர்தரு பார்யா ஸம்பந்தம், ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்பந்தம், ஸ்வ ஸ்வாமி ஸம்பந்தம், ஆதாராதேய ஸம்பந்தம், சரீர சரீரி ஸம்பந்தம், போக்தரு போக்ய ஸம்பந்தம் ஆகிய ஒன்பது வகையான உறவுமுறைகளும் பகவானே ஏற்படுத்திக் கொடுத்தவையாகும். "உன் தன்னோடுறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" என்று ஆண்டாளும் அருளிச் செய்தாள். இதைச் 'சீருறவு' என்பர் பெரியோர். இவ்வுயிர் எம்பெருமானுக்கு அடிமைப் பொருள் என்பதை உணரவேண்டும். உரையோடு கூடின சாஸ்திரங்களை எவ்வளவு கற்றாலும், திருவெஃகா எம்பெருமானோடு தமக்குள்ள உறவுமுறையை அறிந்து கொள்ளவில்லையானால், கற்ற அறிவு பிரைகலந்த பால்போல் திரிந்துபோகும் என்கிறார் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்.

உரைகலந்த நூலெல்லாம் ஓதியுணர்ந்தாலும்
பிரைகலந்த பால்போல் பிறிதாம் — தரையில்
திருவெஃகாமாயனுக்கே சீருறவாம் தங்கள்
உருவெஃகாவுள்ளத்தினோர்க்கு

(நூற்றெ-திருப்-அந்தா-82)



சக்ரவர்த்தி திருமகன்
யதோக்தகாரி ஸந்நிதி

## இக்கோயிலின் தனிச்சிறப்பு

இங்கு மிகப்பெரியவராக சக்ரவர்த்தி திருமகன் எழுந்தருளி இருக்கிறார். இவர் இளைய பெருமாள், ஸீதாபிராட்டி, ஹநுமார் ஆகியோருடன் எழுந்தருளி இருக்கிறார். சக்ரவர்த்தி திருமகனை, பெருமாள் என்றே பெரியோர் கூறுவர். இவரும், தகப்பனார், வசிஷ்ட விச்வாமித்ர மகரிஷிகள் சொன்ன வண்ணமெல்லாம் செயலாற்றி இருக்கிறார். கோயிலருகில் இருப்பவர்களுக்கு இவரை அன்பு மிகுதி. எனவே இவரையும் 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்றழைப்பதில் வியப்பில்லை. இவருடைய திரு அவதாரமும் சித்திரைப் புனர்வஸு. புனர்வஸு நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பெரியோர் சொன்ன வண்ணம் நடப்பர் போலும்!

இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் மணவாள மாமுனிகள் தனிச்சிறப்புக் கொண்டவர். விபவத்தில் ஸ்ரீமணவாள மாமுனிகள் இந்த ஸன்னிதியில் ஓராண்டுக்காலம் ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்ததாகவும், அதனால் இவர் அர்ச்சையிலும் ஞான முத்திரையோடு ஸேவை ஸாதிப்பதாகவும் பெரியோர்கள் கூறுவார்கள். ஐப்பசித் திருமூலத்தன்று இவர் பெருமாளுடன் திருவீதிப் புறப்பாடு கண்டருளுகிறார்.

இக்கோயிலில் ஐப்பசி மாதத்தில் பொய்கையாழ்வாரோடு பிள்ளைலோகாசாரியரும் திருவவதார உத்ஸவத்தை மிகவும் நன்றாகக் கொண்டாடுவது ஒரு சிறப்பு.

இங்குத் தையில் மக உத்ஸவத்தை 'ஓரிரவு இருக்கை' சரித்திரத்தை நினைவூட்டும் வகையில் கொண்டாடுவது வழக்கத்தில் உள்ளது. ஓரிக்கைக்கு எழுந்தருளும் உத்ஸவம் கண்கொள்ளாக்காட்சி. 'பைந்நாகப்பாய் சுருட்டி உத்ஸவம்' என்பதற்கு ஏற்ப பெருமாள் சேஷவாகனத்தில் திருவீதிப்புறப்பாடு நடைபெற்று வருகிறது. ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமாளும், திருமழிசைப் பிரானும் ஓரிக்கைக்கு அருகில் உள்ள பாலாற்றில் எழுந்தருளி திருமஞ்சனம் கண்டருளும் இம் மஹோத்ஸவம் மிக சிறப்பாக நடைபெற்று வருகிறது.

ஒவ்வொரு பெருமாளுக்கும் கங்கைகொண்டான் மண்டபம் இருப்பதுபோல் யதோக்தகாரிக்கும் ஒரு மண்டபம் உண்டு. இதற்கு யாகசாலை மண்டபம் என்று பெயர். இம்மண்டபத்தில் தான் பிரமன் யாகசாலை நிருமித்துத் தேவப்பெருமாளை அவதரிப்பித்தது.

# திருவெஃகா ஸ்தல புராணம்

ச்ரியःபதியான ஸர்வேச்வரன் சேதநோஜ்ஜீவனத்தின் பொருட்டு அர்ச்சா ரூபியாய் எழுந்தருளின திவ்யதேசங்களில் ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்றவை நூற்றெட்டு ஆகும். அவற்றுள் கோயில், திருமலை, பெருமாள்கோயில் என்பவை ப்ரதானமானவை. அவைகளில் காஞ்சீ மாநகரத்திலேயே பதினெட்டு திவ்ய தேசங்கள் உள்ளன. அவற்றுள் திருவெஃகா ஒன்று. திருவெஃகா என்ற திவ்யதேசம் காஞ்சீபுரம் பஸ் ஸ்டாண்டிலிருந்து ஸ்ரீ வரதராஜப்பெருமாள் சந்நிதிக்குப்போகும் வழியில், மத்தியில் அஷ்டபுஜம் என்ற மற்றொரு திவ்யதேசத்துக்கு எதிர்ப்புறமாக இருக்கிறது.

முன்பு, நான்முகக் கடவுள் எம்பெருமானைக் காணவேண்டித் தவம் செய்கையில் ஓர் அசரீரி வாக்கு தோன்றியது. அதாவது "தொண்டை நாட்டிலுள்ள ஸத்ய வ்ரதக்ஷேத்திரத்திற்குச் சென்று ஓர் அச்வமேத வேள்வியியற்றி, ஆயிரம் அச்வமேதயாக பலனைப்பெற்றுத் திருமாலைக் கண்கூடாகக் காணப்பெறுவாய்" என்று. நான்முகனும் அந்த அசரீரி வாக்கின்படி ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்து திருஅனந்த ஸரஸ்ஸையும் அதனருகில் திகழும் திருவத்திமாமலை யிருக்கும் இடத்தில், எதையும் அற்புதமாக நிருமித்து முடிக்கவல்லவனான விச்வகர்மாவையழைத்து ஸ்ரீஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி அவ்விடத்திலேயே யாகசாலையும் மணிமாடங்கள் சூழ்ந்தழகாயதொரு நகரத்தையும் தோற்றுவிக்க ஆணையிட்டார்.

பின்பு யாகம் ஆரம்பிப்பதற்கு நான்முகனின் தர்ம பத்னியாகிய ஸரஸ்வதி இல்லாமல் வேள்வி நடைபெறாது என்று ப்ருஹஸ்பதி தெரிவிக்க, பின்பு பிரமன் வஸிஷ்டரை, ஸரஸ்வதி நதீ தீரத்தில் தவம் செய்து கொண்டிருக்கும் ஸரஸ்வதியை அழைத்து வர அனுப்பினார். முன்பொருகால், ஸரஸ்வதி பக்தர்களும் லக்ஷ்மீ பக்தர்களும் நான்முகக் கடவுளிடத்தில் யார் சிறந்தவர்கள் என்று வினவ, நான்முகனார் தாமாகவே பிராட்டியின் பெருமையை ஸித்தாந்தமாக அறுதியிட்டுக் கூறினார். இதை ஒப்புக்கொண்டு ஸரஸ்வதி, தன்னை நதிகளுக்குள்ளாவது சிறப்புடையவளாம்படி அருள் புரிய வேண்டுமாறு ப்ரார்த்தித்தாள். இதற்கும், ஒப்புயர்வற்று விளங்கும் கங்கையே சிறந்தவளென்று தீர்ப்புக் கொடுத்ததன் பேரில் மிகவும் சினங்கொண்டவளாய் தன் அம்சமான ஸரஸ்வதி நதியை அடைந்து வாழ்ந்து கொண்டிருந்தாள். இந்நிலையிலுள்ள ஸரஸ்வதியை வஸிஷ்ட முனிவர் வந்து ப்ரார்த்தித்துக்கொண்டபொழுது மேற்கூறியவற்றைச் சொல்லி, தான் வருவது இயலாது; வேண்டுமானால் தன் கணவர் தானிருக்கும இடத்திற்கு எழுந்தருளி வேள்வி நடத்தாலாமென்று கூறி, வேள்விக்கு வருவதை மறுத்துவிட்டாள்.

வஸிஷ்டமுனிவர் எவ்வளவு சொல்லியும் வேள்விக்கு வராததால் ஸகல மஹரிஷிகளும் ஸாவித்திரி முதலிய மற்றைய மனைவியரை வைத்துக்கொண்டு வேள்வி தொடங்கி முடிப்பது நலம் என்று கூற, யாகம் ஆரம்பிக்கப்பட்டது. யாகத்தில் தேவர்களுக்கு முதல் மரியாதை நடந்ததனால் அசுரர்கள் சீற்றங்கொண்டு இந்த வேள்வியைக் கலைக்க எண்ணி, அசுரர்களில் ஒருவனான விரோசனன் ஆலோசனையின் பேரில் ஸரஸ்வதியிடம் சென்று "மேன்மை தங்கிய கலைமகளே,

தீய மதிகொண்ட சில முனிவர்களால் தூண்டப்பட்ட உமது கணவர் முக்கிய மஹிஷியான உம்மைத் தவிர்த்து மற்றை மஹிஷிகளோடுகூடி யாகம் செய்யத் தொடங்கியிருக்கின்றனர். மிகவும் அநீதியான இந்தச் செய்தியை நாங்கள் பொறுக்ககில்லோம். எவ்வகையினாலாவது அந்த வேள்வி நடைபெறாத வண்ணம் தடைசெய்தீராகில், உம்மிடத்தில் அன்பு பூண்டொழுகும் எமக்கு மகிழ்ச்சி உண்டாகும்'' என்று கூறினர்.

அதுகேட்டு ஸரஸ்வதி நான்முகனார் செய்யும் வேள்வியைத் தடுப்பதற்கு ஸஹ்யமலையினின்று கிளம்பி வேகவதியென்னும் நதியாகப் பெருகி ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தாள். அந்த நதியின் பெருக்கு வேகத்தைப் பார்த்து யாகசாலையிலுள்ளரனைவரும் வியாகுலப்பட்டு நான்முகனைத் தஞ்சமாக அடைந்தார்கள். பிரமன் யோகத்ருஷ்டியால், இது அசுரர்கள் தூண்டப்பெற்ற ஸரஸ்வதியின் காரியமென்றுணர்ந்து ஸ்ரீமந் நாராயணனைக் குறித்துத் தோத்திரஞ் செய்தார். தோத்திரத்தினால் மிகவும் திருவுள்ளமுவந்த எம்பெருமான், ஏற்கனவே உபநிஷத்துக்கள் தன்னைச் சேதுவாக(அணையாக) ஓதியிருப்பது பொருள் பெற்றதாம்படி ''சதுமுகனார் வேள்விதனைச் சதிர்கொடுக்கச் செறிந்தோடுங் கதியுடைய வேகவதிக்கணையாக வந்துதித்தோய்'' என்றும் ''அணியாக வேகவதி அலையோடு கொண்டோடி ஆலிக்க அணையாகக் கிடந்த கனைதானோ'' என்று பின்னானார் ஏத்துமாறு அந்த ஸரஸ்வதியின் வெள்ளத்தைத் தடைசெய்யவல்ல அணையாகச் சயனித்துக் கொண்டருளினன். அந்த திருப்பள்ளித் திருக் கோலத்தைக் கண்ட ஸரஸ்வதி நாணமுற்று மேலே பெருகிச் செல்ல முடியாமல் அந்தர்வாஹினியாய்ச் சென்று கடல் சேரலுற்றாள்.

யதோக்தகாரியென்று சொல்லப்படுகின்ற அப்பெருமானது தென்புறமாகச் செல்லுற்ற வேகவதியை, வஸிஷ்டர் முதலிய முனிவர்கள் பிரமனது சொற்படி வந்து வணங்கி தாயே! ஸரஸ்வதியே! யாகசாலையில் இனியாகிலும் வந்து சேர்ந்து நாதரோடு கூடிக்களித்திருந்து இப்பெருவேள்வியை நிறைவேற்றியருளவேணும், எல்லா நதிகளிற்காட்டிலும் உன்தனுக்கே மிக்க சிறப்பு உள்ளதாக நான்முகக் கடவுள் அனுக்ரஹம் செய்கின்றார்,'' என்று சொல்லி வேண்டிக்கொள்ள, அவளும் மனமகிழ்ச்சியுடனே நதியில் நின்றும் விரைந்தெழுந்து வந்து நான்முகக் கடவுளோடு சேரலுற்றாள்.

இந்த யாகம் முடியும் சமயத்தில் பரமபவித்ரமான புண்யகோடி விமானம் அக்னி மத்தியில் நின்றும் தோன்றியது. அந்தப் புண்யகோடி விமானத்திலுள்ளே ''உலகேத்து மாழியானத்தியூரான்'' என்றும், ''வரந்தரும் மாமணிவண்ணன்'' என்றும் ஆழ்வார்களால் போற்றப்பட்ட, பேரருளாளப் பெருமாளென்னும் ஸ்ரீ வரதராஜன், காட்சி தந்தருள அவ்விடத்திலுள்ளோர் அனைவரும் கண்டு ஆனந்தமென்னும் அமுதக்கடலில் ஆழ மூழ்கினர்.

சதுமுகனார் வேள்வியைக் காக்க வந்து வேகவதியாற்றின் பிரவாகத்தில் குறுக்கே அணையாக வலதுகை கீழ்பட சயனித்துக் கொண்டு கண் வளர்ந்தருளிய படியால் இப்பெருமான் 'புஜங்கசயனன்', திருவணைப்பள்ளி கொண்ட பெருமான்



திருமழிசை ஆழ்வார்
யதோக்தகாரிஸன்னதி

என்ற திருநாமத்தோடு திகழ்ந்தார். இப் பெருமானார் திருமழிசை ஆழ்வாரின் பெருமையை உலகறியச் செய்வதற்கு புரிந்த கீழ்கண்ட லீலை மிகவும் அற்புதம்.

ஒரு சமயம் பக்திசாரர் என்னும் திருமழிசையாழ்வார், தமக்கு ஆசார்யரான பேயாழ்வாரின் அவதார ஸ்தலமாகிய மயிலாப்பூர் என்று இப்பொழுது வழங்கும் இடத்தில் சிலகாலம் யோகத்தில் இருந்து தமது சொந்த இடமான மஹீஸாரபுரமென்னும் திருமழிசைக்குத் திரும்பி வந்து வழக்கம்போல் அனுஷ்டானத்திற்குப் பிறகு திருமண் சாத்திக்கொள்வதற்கு, வைத்த இடத்தில் திருமண் காணப்படாமையால் மனம் வருந்தலானார். அன்றிரவு அவர் கனவில் திருவேங்கடமுடையான் தோன்றி அருளிச் செய்த படியே காஞ்சிபுரத்தில்

திருவெஃகாவை அடுத்துள்ள பொற்றாமரைக் குளத்தில் திருமண் கண்டு எடுத்துச் சாத்திக்கொண்டு அதன் கரையில் எழுந்தருளியிருக்கும் புஜங்க சயனப் பெருமானை ஸேவித்து வந்தார். பத்திஸாரரின் வைபவத்தை அறிந்து கணிகண்ணன் என்ற பக்தனும் திருவெஃகாவை அடைந்து பத்திஸாரரை ஆசார்யராகக் கொண்டு புஜங்க சயனப் பெருமானை ஸேவித்து வந்தான். அந்த ஊர் பல்லவராயனென்னும் அரசன், தன் மனைவி திருமழிசை ஆழ்வாரின் கடாக்ஷத்தால் முதுமை நீங்கி யௌவனம் பெற்றாள் என்று அறிந்து தானும் இளமைப் பருவம் அடைவதற்கு விரும்பினான். திருமழிசையாழ்வாரது சிஷ்யனான கணிகண்ணனை அந்த அரசன் ஆழ்வாரைத் தம்மிடத்திற்கு அழைத்துவரும்படி கேட்டுக் கொண்டான். தம்முடைய ஆசார்யர் எங்கும் வருவதில்லை என்று கணிகண்ணன் பதிலளித்து விட்டான். கணிகண்ணன் ஒரு வரகவி என்றறிந்து அரசன் தன்னைப்பற்றி ஒரு கவி பாடச் சொன்னான். அனந்த சயனப் பெருமாளையன்றி அன்னியரைத் தான் பாடுவதில்லை என்று அக் கணிக்கண்ணன் சொல்லிவிடவே அரசன் மிகவும் சினங்கொண்டு கணிகண்ணனைக் காஞ்சீபுரத்தை விட்டு வெளியேறும்படிக் கட்டளையிட்டான்.

கணிகண்ணனும் தம் ஆசார்யரான திருமழிசையாழ்வார் முன்பு சென்று, நடந்தவைகளை விண்ணப்பம் பண்ணி, ஆழ்வாரும், பாகவத அபசாரம் நடக்குமிடத்தில பகவானும் இருக்கக் கூடாதென்று பெருமானிடத்தில்,

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டா — துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயு முன் தன்
பைந்நாகப் பாய் சுருட்டிக்கொள்."

என்று விண்ணப்பஞ் செய்ய எம்பெருமானும் பக்தர்க்கிணங்கி அவர் பின்னே எழுந்தருளினார். எம்பெருமானுடைய ஸங்கல்பப்படி காஞ்சீ மாநகரம் கார் இருளால் சூழப்படவே அரசனும் தன் பிழையை உணர்ந்து, ஆழ்வார் இருக்குமிடத்தை அடைந்து சரணடைந்து, தன் தவறுகளைப் பொறுத்து மீண்டும் நகருக்குள் எழுந்தருளும்படி ப்ரார்த்தித்தான். ஆழ்வாரும் மனமுவந்து எம்பெருமானிடத்தில்

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டும் — துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்தன்
பைந்நாகப் பாய் விரித்துக்கொள்."

என்று ப்ரார்த்திக்கவே எம்பெருமானும் பக்தர்க்கிணங்கி திருவெஃகாவை வந்து அடைந்து சேஷ சாயியாய் ஆழ்வார் திறத்து அபிமானத்தால், தான் இங்ஙனஞ் செய்தது பின்புள்ளார்க்கும் ப்ரத்தியக்ஷமாக வேணுமென்று இடத் திருக்கையைக் கீழாக வைத்துக் கண்வளர்ந்தருளினார். பெருமானும் ஆழ்வாரும் காஞ்சிக்கு வெளியே ஓரிரவு தங்கிய இடம் 'ஓர் இரவு இருக்கை' (ஓரிக்கை) என்று சொல்லப்படுகிறது. எம்பெருமான் பக்தன் ப்ரார்த்தித்தபடி செய்ததனால் இவருக்கு தமிழ்மொழியில் 'சொன்னவண்ணம் செய்த பெருமாள்' என்றும் வடமொழியில் 'யதோக்தகாரி' என்றும் திருநாமம் வழங்கப் பெறுகிறது.

# திருவெஃகா மாலை

## ஆழ்வார்கள் அருளியவை

1. நன்றிருந்து யோகநீதி நண்ணுவார்கள் சிந்தையுள்
சென்றிருந்து தீவினைகள் தீர்த்த தேவதேவனே
குன்றிருந்தமாடநீடு பாடகத்து மூரகத்தும்
நின்றிருந்து வெஃகணைக் கிடந்தது என்ன நீர்மையே....

(திருச் — 63)

2. நின்றதெந்தை யூரகத்து இருந்ததெந்தை பாடகத்து
அன்று வெஃகணைக் கிடந்தது என்னிலாதமுன்னெலாம்
அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்
நின்றதுமிருந்ததும் கிடந்ததுமென் னெஞ்சுளே....

(திருச் — 64)

3. நின்றவாறு மிருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரியன
ஒன்றலாவுருவாய் அருவாய நின் மாயங்கள்
நின்று நின்று நினைகின்றேன், உன்னையெங்ஙனம்
நினைகிற்பன், பாவியேற்கு
ஒன்று நன்குரையாய் உலகமுண்டவொண்சுடரே....

(திருவாய் 5-10-6)

4. பிச்சச்சிறுபீலிச் சமண்குண்டர் முதலாயோர்
விச்சைக் கிறையென்னும் அவ்விறையைப் பணியாதே
கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத் தலசயனம்
நச்சித் தொழுவாரை நச்சென்தன் நன்னெஞ்சே....

(பெரியதிரு. 2-6-5)

5. கூந்தலார் மகிழ்கோவலனாய் வெண்ணெய்
மாந்தழுந்தையில் கண்டு மகிழ்ந்து போய்
பாந்தட்பாழியில் பள்ளிவிரும்பிய
வேந்தனைச் சென்று காண்டும் வெஃகாவுளே....

(பெரியதிரு. 10-1-7)

6. பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணும்
உண்டியான் சாபந்தீர்த்த வொருவனூர், உலகமேத்தும்
கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று
மண்டினார், உய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே....

(திருக்குறுந்) ...19)

7. நீரகத்தாய் நெடுவரையினுச்சிமேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நிறைந்த கச்சி
யூரகத்தாய் ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்
உள்ளுவாருள்ளத்தாய் — உலகமேத்தும்
காரகத்தாய் கார்வானத்துள்ளாய் கள்வா
காமருபூங்காவிரியின் தென்பால்மன்னு
பேரகத்தாய், பேராதென்னெஞ்சினுள்ளாய்
பெருமானுன் திருவடியே பேணினேனே...

(திருநெடுந் — 8)

8. வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர்மல்லையாய்
மதிட் கச்சியூராய் பேராய்
கொங்கத்தார் வளங்கொன்றைலங்கல் மார்வன்
குலவரையன் மடப்பாவை — யிடப்பாற் கொண்டான்
பங்கத்தாய், பாற்கடலாய் பாரின்மேலாய்
பனிவரையினுச்சியாய் பவளவண்ணா
எங்குற்றாயெம்பெருமானுன்னை நாடி
ஏழையேனிங்ஙனமே யுழி தருகேனே

(திருநெடுந் — 9)

9. கல்லெடுத்துக் கல்மாரிகாத்தாயென்றும்
காமருபூங் கச்சி யூரகத்தாயென்றும்
வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தா யென்றும்
வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தே யென்றும்
மல்லடர்த்து மல்லரையன்ற ட்டாயென்றும்
மாகீண்ட கைத்தென்மைந்தா வென்றும்
சொல்லெடுத்துத் தன்கிளியைச் சொல்லேயென்று
துணை முலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே

(திருநெடுந் — 13)

10. முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை
மூவாமூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற
அளப்பரிய வாரமுதையரங்கமேய
வந்தணனை அந்தணர்தம் சிந்தையானை
விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில
வெஃகாவில் திருமாலைப் பாடக்கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று
மடக் கிளியைக் கைகூப்பி வணங்கினாளே

(திருநெடுந் 14)

11. வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள் கோவல் பொன்னகரும் — நான்கிடத்தும்
நின்றானிருந்தான் கிடந்தான் நடந்தானே
என்றால் கெடுமாமிடர். (முதல் திருவ 77)

12. சிறந்தவென் சிந்தையும் செங்கணரவும்
நிறைந்தசீர் நீள் கச்சியுள்ளும் — உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே
தாம் கடவார் தண்டுழாயார் (மூன்றாந் திரு 26)

13. அன்றிவ்வுலகம் அளந்தவசைவே கொல்
நின்றிருந்து வேளுக்கை நீணகர் வாய் — அன்று
கிடந்தானைக் கேடில் சீரானை முன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமே காண் (மூன்றாந் திரு 34)

14. விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடம்
மண்ணகரம் மாமாடவேளுக்கை — மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி
தன்குடந்தை நீரேற்றான் தாழ்வு. (மூன்றாந் திரு 62)

15. இசைந்தவரவமும் வெற்புங்கடலும்
பசைந்தங் கமுதுபடுப்ப — அசைந்து
கடைந்த வருத்தமோ கச்சிவெஃகாவில்
கிடந்திருந்து நின்ற துவமங்கு (மூன்றாந் திரு 64)

16. பொருப்பிடையே நின்றும் புனல்குளித்தும், ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் நீர் வேண்டா — விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை மெய்மலர் தூய்க் கை தொழுதால்
அஃகாவே தீவினைகளாய்ந்து. (மூன்றாந் திரு 76)

17. நாகத்தணைக்குடந்தை வெஃகா திருவெவ்வுள்
நாகத்தணையரங்கம் பேரன்பில்
நாகத்தணைப் பாற்கடல் கிடக்கும் ஆதிநெடுமால்
அணைப்பார் கருத்தனாவான்
(நான்முகன் திரு 36)

18. நாநிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்ட
வேனிலஞ்செல்வன் சுவைத்துமிழ்பாலை, கடந்தபொன்னே
கால் நிலந்தோய்ந்து விண்ணோர் தொழுங்கண்ணன்
வெஃகாவுது அம்பூந்
தேனிளஞ்சோலையப்பாலது எப்பாலைக்கும் சேமத்ததே.
(திருவிருத் 26)

19. சேமஞ்செங்கோனருளே செறுவாரும் நட்பாகுவரென்று
ஏமம்பெறவையஞ் சொல்லும் மெய்யே, பண்டெல்லா
மறைசூய்
யாமங்கடோ றெரிவீசும் நங்கண்ணனந்தண்ணந்துழாய்த்
தாமம்புனையா; அவ்வாடையீதோவந்து தண்ணென்றதே
(திருவிருத்த 27)

20. பேராமருதிறுத்தான் வெள்ளறையே வெஃகாவே
பேராலிதண்கால் நறையூர் திருப்புலியூர்
ஆராமம் சூழ்ந்த அரங்கம். (சிறிய திருமடல் கண்ணி 70-71)

21. வெஃகாவில் உன்னிய யோகத்துறக்கத்தை
ஊரகத்துள் அன்னவனை அட்டபுயகரத் தெம்மானேற்றை
என்னை மனங்கவர்ந்த ஈசனை
(பெரிய திருமடல் கண்ணி 127-129)

## ஸ்ரீயதோக்தகாரி ஸுப்ரபாதம்

### ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி அருளியது

கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே ।
உத்திஷ்ட நரசார்தூல கர்த்தவ்யம் தைவ மாஹ்நிகம் ॥
உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ ।
உத்திஷ்ட கமலாகாந்த த்ரைலோக்யம் மங்களம் குரு ॥

ஸரோமுநீந்த்ராதிஸமஸ்த பக்தா: ஸமுத்க்ருணந்தோ மதுரா: ஸ்வஸூக்தி:, ।
ச்ரிய: பதே! த்வாம் ஹி ஸிஸேவிஷந்தே யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥-1

யதார்த்தவாசோ யசஸோ ஸம்ருத்தா: பூதாதயோயோகிவரா: ப்ரஸித்தா: ।
த்வாரி ஸ்திதாஸ் தாநவலோகயேதா: யதோக்த காரிந் தவ ஸுப்ரபாதம் ॥ 2

மஹத்ஸமாக்யாத முநீந்த்ரமுக்யா: மநீஷவர்க்கா மஹிதப்ரபாவா: ।
காயந்தி ஸூக்தாநி பணீந்த்ரசாயிந்! யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥-3

ஸ்ரீ பக்தி ஸாராதிமஹா முநீந்த்ரா: த்வத்பாத பத்ம ப்ரவணாந்தரங்கா ।
கைங்கர்யஸக்தாஸ் ஸமுபஸ்திதாஸ் தே யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥ 4

ஸ்ரீமத் சடாராதிமுநீஸ் வராஸ் தே ஸஹஸ்ரகீத்யாதி ஸமுத்க்ருணர்ந்த: ।
ஸ்வகீயபக்தைஸ் ஸஹிதாஸ் ஸமேதா: யதோக்காரிந் தவ ஸுப்ரபாதம்: ॥ 5

பக்தாக்ரகண்யா: குலசேகராத்யா: அர்க்யாதியுக்தாஸ் ஸமுபாகதாஸ் தே, ।
தத்தாத்ருசாந் ப்ராதராநுக்ரஹீதும் யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥-6

ஸ்ரீ பட்டநாதாதி மஹாமுநீந்த்ரா: ஸுகந்திபுஷ்பாணி ஸமாத தாநா ।
குதூஹலாட்யாஸ் ஸமுபஸ்திதாஸ் தே யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥-7

பக்தாங்க்ரிரேணுப்ரமுகாஸ் ஸபக்தா: ஆநந்தஸந்தோஹ ஸம்ருதத சித்தா ।
நாநோபஹாரைஸ் ஸஹிதாஸ் ஸமேதா: யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥-8

ப்ரேமார்த்ரசித்தா: முநிவாஹநாத்யா: ப்ரேம்ணா க்ருணந்தோ விவிதம் ஸுகீதம், ॥
ஸமாகதாஸ் தேஷிப்ருசம் தயேதா: யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥ 9

ஸ்ரீமத்கலித்வம்ஸி மஹாமு நீந்த்ர: ஸர்வைச்ச பக்தைஸ் ஸஹிதஸ் ஸமாகாத் ।
பக்தாநிமாந் க்ஷிப்ரமநுக்ரஹீதும் யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥-10

ஸ்ரீநாதயோகீ யதிராஜயோகீ லோகார்ய வர்யோ வரயோகிவர்ய: ।
அன்யேச ஸர்வே குரவஸ் ஸமாயந் யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் ॥-11

ஸாமகாநநிரதா இஹபக்தா: ஸ்ரீயகோக்த பகவத் பதஸக்தா:।,
ஸுப்ரபாதஸமேய ஸ்துதிமேதாம் ஸம்படந்து விலஸந்து ஸம்ருத்தா: ॥ 12

யதோக்தகாரிஸுப்ரபாத மேததந்வஹஞ்ச யே,
படந்தி சுத்தபக்திநிக்ந மானஸா மநீஷிண:
பஜந்தி தே ச்ரியம் தியம் ஸமஸ்தஸம்பதாட்யதாம்
யதோக்தக்ருந் மஹாக்ருபாஞ்ச நித்யமஸ்து மங்களம்....॥ ॥ 13

ஸ்ரீயதோக்தகாரி ஸுப்ரபாதம் முற்றிற்று

# வேகாஸேது ஸ்தோத்ரம்
## ஸ்ரீவேதாந்த தேசிகர் அருளியது

ஸ்ரீ காஞ்சீபுரிக்கு நடுநாயக மணியாய் விளங்குபவர் ஸ்ரீயதோக்தகாரிப் பெருமாள். தமிழில் சொன்னவண்ணம் செய்த பெருமாள் என்று வழங்கப்படுபவர். மிகப் பழமை வாய்ந்த இந்த எம்பெருமானை நாடோறும் வழிபட்டு வந்த வேதாந்த தேசிகர் ஸ்தோத்திர ரூபமாக அருளிச்செய்த பத்து ச்லோகங்களே 'வேகாஸேது' ஸ்தோத்ரம். இப்பழம் பெரும்பதியே திருவெ·கா என்று பழைய நூல்களில் குறிக்கப்பட்டுள்ளது.

ஏகம் வேதவதீமத்யே ஹஸ்திசைலேச த்ருச்யதே ।
உபாய பலபாவேந ஸ்வயம் வ்யக்தம் பரம் மஹ : ॥
ஈஷ்டே கமயிதும் பாரம் ஏஷஸேது ரபங்கர : ।
யத்ர ஸாரஸ்வதம் ச்ரோதோ விச்ராம்யதி விச்ருங்கலம் ॥

ஜயதி ஜகதேகஸேது: வேகவதீ மத்ய லக்ஷிதோ தேவ : ।
ப்ரச மயதி ய : ப்ரஜாநாம் ப்ரதிதான் ஸம்ஸார ஜலதிகல்லோலா
விபாது மே சேதஸி விஷ்ணுஸேது: வேகாபகாவேக । விதாதஹேது : ।

அம்போஜயோநேர் யதுபக்ஞமாஸீத்

அபங்க ரக்ஷா ஹயமேத தீக்ஷா ॥
சதுரானன ஸப்த தந்து கோப்தா ஸரிதம் வேகவதீம் அஸௌ நிருந்தன் ।
பரிபுஷ்யதி மங்களானிபும்ஸாம் பகவத் பக்திமதாம் யதோக்தகாரீ ॥

ஸ்ரீமான் பிதாமஹவதூ பரிசர்யமாண :
சேதே புஜங்க சயநே ஸ மஹா புஜங்க : ।
ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம்
பக்தாநு கந்து ரிஹ யஸ்ய கதாகதானி ॥

ப்ரசமித ஹயமேத வ்யாபதம் பத்மயோநே :
ச்ரித ஜன பரதந்த்ரம் சேஷ போகே சயானம் ।
சரணமுப கதாஸ்ம : சாந்த நிஸ்ஸேஷ தோஷம்
சதமக மணி ஸேதும் சாஸ்வதம் வேகவத்யா : ॥

சரணமுப கதாநாம் ஸோயமாதேச காரீ
சமயதி பரிதாபம் ஸம்முகஸ்ஸர்வ ஜந்தோ : ।
சதகுண பரிணாம : ஸந்நிதௌ யஸ்ய நித்யம்
வரவிதரணபூமா வாரணா த்ரீச்வரஸ்ய ॥

காஞ்சீ பாக்யம் கமல நிலயா சேதஸோ பீஷ்ட ஸித்தி:
கல்யாணானாம் நிதிரவிகல: கோபிகாருண்ய ராசி : ॥
புண்யாநாம் ந: பரிணதி ர ஸௌ பூஷயந்போகி சய்யாம்
வேகாஸேதுர் ஜயதி விபுலோ விச்வரக்ஷைகஹேது : ॥

வேகாஸேதோரிதம் ஸ்தோத்ரம் வேங்கடேசந நிர்மிதம் ॥
யே படந்தி ஜநாஸ்தேஷாம் யதோக்தம் குருதே ஹரி : ॥

# இலக்கியச் சான்றுகள்

— டாக்டர் கே.ஏ.மணவாளன்

சங்க இலக்கியப் பத்துப் பாட்டினுள் ஒன்றான பெரும் பாணாற்றுப் படையில் திருவெஃகா என்னும் இந்த திருத்தலத்தைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இப் பெரும்பாணாற்றுப் படையை இயற்றியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்னும் பெரும்புலவராவார்.

தொண்டை மானிளந்திரையனிடம் பரிசு பெற்றுத் திரும்பி வரும் யாழ்ப்பாணன் ஒருவன், தன் எதிரே வரும் மற்றொரு பாணனுக்கு வழி கூறி ஆற்றுப்படுத்தும்போது, இத்தத் திருவெஃகா என்னும் சோலை சூழ்ந்த நல்லிடத்தில் இளைப்பாறி அங்கே பாம்பணையில் பள்ளிகொண்டிருக்கும் திருமாலாகிய பரமனை (சொன்ன வண்ணம் செய்த பெருமாளை) வழிபட்டுச் செல்வாயாக என்று கூறியதாகச் சிலவரிகள் (371 0 374) காணப்படுகின்றன.

நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந்தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்
வெயினுழை யறியா குயினுழைப்பொதும்பர்
..............................
பொய்யா மரபிற் பூமலிபொலிந்துறைச்
செவ்விகொள்பவரோடசை இ யவ்வயின்
அருந்திற் கடவுள் வாழ்த்திச் சிறிது நும்
கருங்கோட்டின்னிய மியக்கினிர் கழிமின்

## சுருக்கமான பொருள்

நீண்ட பூங்கொத்துக்களைக் கொண்ட காந்தணையுடைய அழகிய பக்கமலையிலே யானை கிடந்தாற்போல, பாம்பணையாகிய படுக்கையிலே துயில் கொண்டோனுள்ள அவ்விடத்தில் .... குளிர்ந்த சோலையில் ... இளைப்பாறி.

இங்கு பிறகவிஞர்கள் "கச்சிவெஃகாவில் கிடந்திருந்து நின்றதுவும் அங்கு", "கிடந்தான் இதுவன்றோ மன்றார் மதிட் கச்சிமாண்பு", என் வெஃகா கச்சியிலுள்ளதாகக் கூறுகின்றனர். ஆனால் பெரும்பாணாற்றுப்படையில் பாம்பணைப்பள்ளிய மர்ந்தோன் ஆங்கண் (373) மரீஇ (382) அருந்திறந் கடவுள் வாழ்த்தி (392) இன்னியம் இயக்கினிர் தமிழின் என்று கூறிய பின்பே மூதூர்கச்சியோனே (411, 420) கச்சிப்பதியின் பிரஸ்தாபம் வருகின்றது. இதனால் இப்பழம் பெரும்பதியாகிய திருவெக்க கச்சிப்பதியைச் சார்தற்கு முன்னரேயுள்ள ஒரு பழைய பதியாக இருக்கவேண்டும் என்று தெரிகின்றது.

ஆதாரம் பத்துப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை உரை, பக்கம் 62, வை.மு.கோ.உரை. நச்சினார்க்கினியரும் "பாம்பணைப் பள்ளியமர்ந்தோனை"த் திருவெஃகா எம்பெருமானென்றே கூறியுள்ளார்.

# ஸ்ரீ பொய்கையாழ்வார் வைபவம்

துலாயாம் ஶ்ரவணே ஜாதம் காஞ்ச்யாம் காஞ்சநவாரிஜாத் |
த்வாபரே பாஞ்சஜந்யாம்ஸம் ஸரோயோகி$_3$ நமாஶ்ரயே ||

[துவாபரயுகத்தில் காஞ்சியில் திருவெஃகாவில் பொய்கையில் பொற்றாமரையிலிருந்து ஐப்பசித் திருவோணத்தில் பாஞ்சஜன்யம் என்னும் சங்கத்தின் அம்ஸமாக அவதரித்த பொய்கையாழ்வாரை ஆஸ்ரயிக்கிறேன்.]

காஞ்ச்யாம் ஸரஸி ஹேமாப்$_3$ஜே ஜாதம் காஸாரயோகி$_3$நம் |
கலயே யஶ்ஶ்ரிய: பதயே ரவிம் தீ$_3$பமகல்பயத் ||

[காஞ்சியில் பொய்கையொன்றில் பொற்றாமரையில் பிறந்தவராய், ஸ்ரீமந்நாராயணனுக்கு வெய்ய சுடரோனை விளக்காக ஏற்றியவரான பொய்கையாழ்வாரை தியானிக்கிறேன்.]

முகுந்த$_3$ஸ்ய முகோ$_3$ல்லாஸ மூலவாக்$_3$ஜாலமூர்ச்சி$_3$தம் |
முநிமுக்$_3$யம் ஸரோஜாதம் முக்திமூலமுபாஸ்மஹே ||

[முகுந்த$_3$னின் முகமலர்த்தியடியாக உண்டான பாசுரங்களைப் பாடி மயங்கி நிற்பவரும், ஆழ்வார்களில் முதல்வரும், முக்திக்கு மூலமாயிருப்பவருமான பொய்கையாழ்வாரை உபாஸிக்கிறோம்.]

ஆஜ்ஞாதீ$_4$ஸ்ரீசந்த$_3$நே த்$_3$வாபராக்$_2$யே
ஸித்$_3$தா$_4$ர்த்$_2$யாக்$_3$யே வத்ஸரே மாஸி சேஷ்டே |
ஸுக்லாஷ்டம்யாம் பௌ$_4$மவாரே ஸுபு$_4$ர்க்ஷே
விஷ்ணோர் ஜந்ம ப்ராப காஸாரயோகீ$_3$ ||

[பொய்கையாழ்வார், துவாபரம் என்ற யுக$_3$த்தில் "ஆஜ்ஞாதீ, ஸ்ரீசந்த$_3$ந" என்னும் அக்ஷரங்களால் கடபயாதி, ஸங்க்$_2$யைப்படி கிடைத்த 862900 வருடம் சென்றபின் ஸித்$_3$தா$_4$ர்த்தி, என்கிற வருடம் ஐப்பசி மாதத்தில் சுக்லபக்ஷத்தில் அஷ்டமிதிதி$_2$யில் செவ்வாய்க்கிழமையில் விஷ்ணுவினுடைய, மங்க$_3$ளமான திருவோண நட்சத்திரத்தில் அவதரித்தருளினார்.]



பொய்கை ஆழ்வார்
அவதாரஸ்தலம் : யதோக்தகாரிஸன்னதி

ஹேமாப்₃ஜிநீ ஹேமஸரோஜ க₃ர்ப்பாத் ஸ்ரீபாஞ்சஜந்யோSஜநி தத்ர யோகீ₃
தாரே ஹரேராஸ்வயுஜாக்₂யமாஸே ஸமஸ்தஜீவாவநகர்மஹேதோ:

[தி₃வ்யஸூரிசரிதம் 2-10]

[பரமபுருஷனுடைய பாஞ்சஜன்யமென்னும் திருச்சங்காழ்வான், எல்லா உயிர்களையும் ரக்ஷிப்பதற்காக ஐப்பசி மாதத்தில் விஷ்ணுவினுடையதான திருவோணநாளில் பொற்றாமரைப் பொய்கையில், பொற்றாமரைமலரின் நடுவிலிருந்து பொய்கையாழ்வாராக அவதரித்தருளினான்.]

முற்கூறிய தனியன்களிலும், வைப₄வ ஸ்லோகங்களிலும், முன்னோர்கள் அநுஸந்தித்த ரீதியில் த்₃வாபரயுக₃த்தில் 862900 வருடங்களுக்குப்பின் ஸித்₃த₄ார்த்தி, என்னும் வருடத்தில் ஐப்பசி மாதத்தில் ஸுக்லபக்ஷ அஷ்டமி த்தி₂யும் செவ்வாய்க்கிழமையும் கூடிய திருவோண நக்ஷத்திரத்தில் பாஞ்சஜன்யம் என்னும் ஸங்க₂த்தின் அம்ஸமாகக் காஞ்சியில் பொய்கை ஒன்றில் பொற்றாமரையில் பிறந்தவர் பொய்கையாழ்வார்.

செய்யதுலா வோணத்திற் செகத்துதித்தான்₃ வாழியே
திருக்கச்சி மாநகரஞ் செழிக்கவந்தோன் வாழியே
வையந் தகளிநூறும் வகுத்துரைத்தான் வாழியே
வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே
வெய்யகதி ரோன்தன்னை விளக்கிட்டான் வாழியே
வேங்கடவர் திருமலையை விரும்புமவன் வாழியே
பொய்கைமுனி வடிவழகும் பொற்பதமும் வாழியே
பொன்முடியுந் திருமுகமும் பூதலத்தில் வாழியே,

என்னும் வாழிய திருநாமமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

# முதலாழ்வார்கள் மூவர் வைபவம்

இப்படி அயோநிஜராக அவதரித்த இம்மூவரும் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்று, ரஜஸ்தமோகு₃ணங்களற்றவராய், ஸத்வகு₃ணம் மிகுந்தவராய், எம்பெருமான் விஷயத்தில் அடிமை செய்வதில் ஊன்றி நிற்பவராய், நிறைந்த ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யங்களையுடையவராய், சோறு, நீர், வெற்றிலை முதலானவற்றை தா₄ரக போஷக போ₄க்₃யங்களாகக் கொள்ளாமல் எம்பெருமானுடைய கு₃ணங்களையே எல்லாமாகக் கொண்டவர்களாய், உண்டியே உடையே உகந்தோடும் ஸம்ஸாரிகளோடு ஒட்டாதவர்களாய், ஒரு நாள் இருந்தவிடத்திலே மறுநாளிராமல் ஒவ்வொருநாள் ஒவ்வொரு ஊரில் தங்குகிறவர்களாய், ஒருவரையொருவர் அறியாதே தனித்தனியே வாழ்ந்து வந்தார்கள். இப்படியிருக்கும் காலத்தில், இவர்களைக் கொண்டு தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை உலகுய்ய அவதரிக்கச் செய்யத் திருவுள்ளம் பற்றியவனாய், இவர்களைத் திருக்கோவலூரிலே ஒருநாளிரவு சந்திக்கச் செய்தான் எம்பெருமான். முதலில் அவ்வூருக்கு வந்த பொய்கையாழ்வார் 'ம்ருகண்டு', முனிவருடைய ஆஸ்ரமத்தின் இடைகழியில் ஸயனித்துக் கொண்டிருந்தார். அப்போது பூ₄தத்தாழ்வார் அவ்விடத்திற்கு வந்து தங்க இடம் கேட்க, ''இவ்விடம் ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம்'' என்று கூறிப் பொய்கையாழ்வார் அவரை வரவேற்றார். இருவரும் ஒருவர்க்கொருவர் தண்டனிட்டு ப₄க₃வத்₃கு₃ணாநுப₄வம் செய்துகொண்டு வீற்றிருந்தார்கள். அப்போது அங்கு வந்த பேயாழ்வார் தங்க இடம் கேட்க, ''இவ்விடம் ஒருவர் படுக்கலாம். இருவர் இருக்கலாம். மூவர் நிற்கலாம்'' என்று கூறிப் பொய்கையாழ்வாரும் பூ₄தத்தாழ்வாரும் பேயாழ்வாரை வரவேற்றனர். ஒருவர்க்கொருவர் தண்டனிட்டு மூவரும் அவ்விடை கழியிலேயே நின்றுகொண்டு எம்பெருமானுடைய கு₃ணங்களை ஒருவர்க்கொருவர் சொல்லியும் கேட்டும் மகிழ்ந்திருந்தனர். ஜ்ஞாநிகளான இவர்களோடு நெருக்கத்தை விரும்பிய எம்பெருமான் அங்கு வந்து இவர்களை நெருக்கத் தொடங்கினான். ''இப்படி நெருங்குகிறவர் யார்?'' என்று காண்பதற்காக ''வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக'' என்று தொடங்கி, வருத்தும் புறவிருள்மாற்ற, மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையும் கூட்டி, ஒன்றத்திரித்து அன்றெரித்த திருவிளக்காக முதல்திருவந்தாதியைப் பாடினார் பொய்கையாழ்வார். ''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தையிடுதிரியா. நன்புருகி — ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்'' என்று தொடங்கி, இறைவனைக் காணும் இதயத்து இருள்கெட, ஞானமென்னும் நிறைவிளக்கு ஏற்றுவதுபோலே இரண்டாம் திருவந்தாதியைப் பாடினார் பூ₄தத்தாழ்வார். இவ்விரண்டு விளக்குகளினாலும் மன்னிய பேரிருள் மாண்டபின், கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனைக் கண்டு காட்டிய தமிழ்த் தலைவரான பேயாழ்வார், ''திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்'' என்று தொடங்கி மூன்றாம் திருவந்தாதியைப் பாடினார். ''நீயும் திருமகளும் நின்றாயால்'' [முதல்-திருவ 86] என்னும் பாசுரத்திலே பொய்கையாழ்வார் இச்செய்தியைத் தெளிவாகப் பேசினார். மூவரும் உலகுய்ய இவ்வண்ணமாக தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை அருளிச்செய்து, எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகு₃ணங்களை விஸ்தாரமாகத் தாங்கள் அநுப₄வித்துப் பிறரையும் அநுபவிக்கச் செய்தார்கள்.

அதற்குப்பின் அம்மூவரும் தேஹளீ.னான திருக்கோவலூர் ஆயனாரிடம் விடைபெற்றுக் கொண்டு, பலகாலம் திவ்யதேஸ யாத்திரை செய்து, திருமழிசைக்குச் சென்று, திருமழிசையாழ்வாரைக்கண்டு பேசி, அவரோடு கூடிக் களித்து யோக பலத்தால் நெடுங்காலம் வாழ்ந்திருந்து முடிவில் திருக்கோவலூரையே அடைந்து அங்கேயே திருநாட்டுக்கு எழுந்தருளினார்கள்.

மற்ற ஆழ்வார்களுக்கு முன்னே வந்து அவதரித்து அவர்களுக்கும் வழிகாட்டியாக திவ்யப்ரபந்தங்களை முதன்முதலில் அருளிய பெருமையினால் இவர்கள் முதலாழ்வார்கள் என்று பேர்பெற்றார்கள்.

இனி இவர்களுடைய திருவந்தாதிகளின் ஸாரம் விவரிக்கப்படுகிறது. மூன்று ருஷிகள் கூடி ஒரு வியாகரண ஸாஸ்த்ரத்திற்குக் கர்த்தாக்களானாற்போலே, முதலாழ்வார்கள் மூவரும் கூடி மூன்று திருவந்தாதிகளாலே நிர்ணயித்த அர்த்தம் ஒன்றே என்பர் பெரியவாச்சான்பிள்ளை. முதலாழ்வாரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி லீலாவிபூதியையும், "செய்ய சுடராழியான்" என்று நித்ய விபூதியையும் அநுஸந்தித்துக் கொண்டு ப்ரபந்தத்தைத் தொடங்குகையாலே, உபயவிபூதிகளோடும் கூடியவன் பரம்பொருள் என்று நிலைநாட்டினார். இரண்டாமவரான பூதத்தாழ்வார் "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" என்று தொடங்குகையாலே அப்பரம்பொருள் நாராயணனே என்று நிலைநாட்டினார். மூன்றாமவரான பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்குகையாலே லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டிப் பரதத்வநிர்ணயம் செய்தார். முதல்வரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி ஞானம் பிறந்த நிலையை வெளிப்படுத்தினார். இரண்டாமவரான பூதத்தாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கி ஞானம் முற்றி பக்தியாகும் நிலையை வெளிப்படுத்தினார். மூன்றாமவரான பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்கி அந்த பக்தியாலே பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தபடியை விளக்கினார். ஆக, மூன்று திருவந்தாதிகளும் சேர்ந்து ஜ்ஞான, பக்தி, ஸாக்ஷாத்காரங்களைச் சொல்லுகின்றன. மூன்று திருவந்தாதிகளும் முறையே — பரமாத்மாவைக் காண்பதாகிற பரபக்தியையும், அதன் முற்றிய நிலையாய் அவனோடு கூடி அனுபவிப்பதாகிற பரஜ்ஞாநத்தையும், அதன்முற்றிய நிலையாய் அவனைப் பிரியில் தரியாமையாகிற பரமபக்தியையும் விளக்குகின்றன என்றும் நிர்வஹிப்பர்கள். முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலே மண்டி யிருப்பார்கள் என்பது பூர்வாசார்யர்களின் நிர்ணயம். இம்மூன்று திருவந்தாதிகளின் விஸேஷார்த்தங்களை எமது விவரணத்தோடு கூடிய பெரியவாச்சான் பிள்ளையின் வ்யாக்யானத்திலிருந்தும், அப்பிள்ளையுரையிலிருந்தும் தெளிவாக அறியலாம்.

ஐப்பசியி லோண மவிட்டம் சதயமிவை
ஒப்பிலவாநாள்க ளாலகத்தீர் — எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனேதோன்று சிறப் பால்

மற்றுள்ள வாழ்வார்க ளுக்கு முன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த — பெற்றிமையோ
ரென்றுமுத லாழ்வார்க ளென்றும் பெயரிவர்க்கு
நின்றதுலகத்தே நிகழ்ந்து

என்னும் பாசுரங்களில் மாமுனிகளும் முதலாழ்வார்கள் மூவரும் முறையே ஐப்பசியில் ஓணம், அவிட்டம், சதயங்களில் அவதரித்தருளியதை அநுஸந்தித்தருளினார்.